தாவினை யின்றி வெந்நோய்க் கதிகளுள் தவழு மென்ற
கோவினை யன்றி யெந்நாக் கோதையர்க் கூற லுண்டே.

நல்வினைக் குழவி நன்னீர்த்
 தயாவெனும் செவிலி நாளும்
புல்லிக்கொண் டெடுப்பப் பொம்மென்
 மணிமுலை கவர்ந்து வீங்கிச்
செல்லுமாற் றேவர் கோவா
 யெனுமிருள் கழிந்த சொல்லால்
அல்லிமேல் நடந்த கோவே
 யச்சத்து ணீங்கி னேமே. எஎ0

அவர்கள் பின்னரும் "இறைவ, நின் திருவடி பழ வினையை யறுக்கும் வாளாம்" என்று புகழ்ந்தனர்.

**சீவகன் அவர்கட்கு உறுதி கூறல்**

இன்பமற் றென்னும் பேரா னெழுந்தபுற் கற்றை நீற்றித்
துன்பத்தைச் சுரக்கு நான்கு கதியெனுந் தொழுவிற் றேன்றி
நின்றபற் றூர்வ நீக்கி நிருமலன் பாதஞ் சேரின்
அன்புவிற் றுண்டு போகிச் சிவகதி யடைய லாமே. எஎக

**சீவகன் வீடு பெறுதல்**

உழவித்தி யுறுதி கொள்வார்
 கொண்டுய்யப் போகல் வேண்டித்
தொழுவித்தி யறத்தை வைத்துத்
 துளங்கிமி லேறு சேர்ந்த

---

எகூகூ. விவினையின்றி - கொடுந்தொழில் இன்றி. காம முலை - காமமாகிய முலை. வீங்கி - பருத்து. தாவினை யின்றி - குதித்துப் போவதின்றி. கோவினை - இறைவனை. கோதையர் - கோதாகிய பொருளையுடையவர்.

எஎ0. நன்னீர்த் தயா - நல்ல நீர்மையுடைய அருள். பொம்மென் மணி முலை - பெருத்த அழகிய முலை. புல்லிக்கொண்டு - தழுவிக்கொண்டு. கோவாய்ச் செல்லுமால் - இந்திரனாய்ச் செல்வான். இருள் கழிந்த சொல் - குற்றமில்லாத சொல். அல்லி - தாமரைப் பூ.

எஎக. மற்று - அசை. பேரான் - பெரிய பசு. சுரக்கும் - செய்யும். தொழுவில் - மாட்டுத் தொழுவில். நீற்றி - ஊட்டி. பற்றூர்வம் - பற்றும் ஆர்வமும். புற்கற்றை - மனவெழுச்சியாகிய புற்கற்றை. நிருமலன் - மலமற்றவன். சேரின் - நினைந்து அடைவாராயின். அன்பு விற்று உண்டு - அன்பைக் கொடுத்து. சிவகதி - வீட்டுலகு.

குழவித்தண் திங்க ளன்ன
விருக்கைய னாகிக் கோமான்
விழவித்தாய் வீடு பெற்றான்
விளங்கிநால் வினையும் வென்றே. ௭௭௨

அப்போதில் தேவர்கள் ஊர்திகளிற் போந்து சாந்த ணிந்து பூச்சொரிந்து புகையெழுப்பி வணங்கினர். விண்ணவரும் மண்ணவரும் பரிநிர்வாண மென்னும் திருமணத்தை விதிப்படி செய்து வலஞ்செய்துகொண்டு போயினர்.

## வீடுபேற்றின்பம்

கேவல மடந்தை யென்னுங் கேழ்கிளர் நெடிய வாட்கண்
பூவலர் முல்லைக் கண்ணிப் பொன்னொரு பாக மாகக்
காவலன் வானோர் கூறாக் கண்ணிமை யாது புல்லி
மூவுல குச்சியின்பக் கடலினுள் மூழ்கி னானே. ௭௭௩

சீவகனுடைய தேவிமாராகிய காந்தருவதத்தை முதலி யோர் ஓர் எறும்பிற்கும் ஏதம் வாராவகையில் இருந்தும், நடந்தும், கிடந்தும் தாம் மேற்கொண்ட தவம் முற்றினார்.

## சீவகன் தேவிமார் பெண்பிறப்பு நீங்க நோற்றல்

சூழ்பொற் பாவையைச் சூழ்ந்து புல்லிய
காழகப் பச்சை போன்று கண்டெறாஉம்
மாழை நோக்கினார் மேனி மாசுகொண்டு
ஏழைப் பெண்பிறப் பிடியச் சிந்தித்தார். ௭௭௪

௭௭௨. உழவித்தி - உழவுத் தொழிலைப் பரப்பி. கொண்டுய்யப் போகல்வேண்டி - கொள்ள வல்லார் கொண்டு பிறவியைத் தப்பப் போகலை விரும்பி. தொழு - சமவசரணம். இமில் ஏறு - கொண்டையையுடைய ஏறு. குழவித் தண் திங்கள் - பிறைத்திங்கள். விழவித்தாய் - விழவுக்குக் காரணமாய், ஏறு சேர்ந்த திங்கள் - இடபவிராசியைச் சேர்ந்த திங்கள். உழவு - வழிபாடு. நால்வினை - வேதநீயம், ஆயுசியம், நாமம், கோத்திரம்.

௭௭௩. கேவல மடந்தையென்னும், கண்ணும் கண்ணியுமுடைய பொன். பூவலர் முல்லைக் கண்ணி - முல்லைப் பூவால் தொடுத்த கண்ணி. கேழ் - நிறம். காவலன் - சீவகன். கூறு - பங்கு. புல்லி - சேர்ந்து. இன்பக் கடல் - சிவபோகம் என்னும் இன்பக் கடல்,

௭௭௪. காழகப் பச்சை - கருஞ்சேற்றையுடைய தோல். கண் தெறும் - கண்ணைக் கூசும். மாழை - இளமை. ஏழைப்பெண் - தாழ்ந்த பெண் பிறப்பு. இடிய - கெடவேண்டுமென்று.

### அவர்கள் இந்திரராய்த் துறக்க மெய்துதல்

ஆசை யார்வமோ டைய மின்றியே
ஓசை போயுல குண்ண நோற்றபின்
ஏசு பெண்ணொழித் திந்தி ரர்களாய்த்
தூய ஞானமாய்த் துறக்க மெய்தினார். ௭௭௫

### அவர்கள் துறக்க வின்ப மார்தல்

காம வல்லிகள் கலந்து புல்லிய
பூமென் கற்பகப் பொன்ம ரங்கள்போல்
தாம வார்குழற் றைய லார்முலை
ஏம மாகிய வின்ப மெய்தினார். ௭௭௬

### நந்தட்டனும் தோழன்மார்களும் ஐம்பொறியையும் தம் வயமாமாறு நோற்றுத் தவம்செய்தல்

பாவ னைமரீஇப் பட்டி னியொடுந்
தீவி னைகழூஉந் தீர்த்தன் வந்தியாப்
பூவுண் வண்டன கொட்பிற் புண்ணியர்
நாவின் வேட்கையும் நஞ்சி னஞ்சினார். ௭௭௭

### இவர்கள் தேவராதல்

கருவிற் கட்டிய காலம் வந்தென
உருவ வெண்பிறைக் கோட்டி னோங்கிய

---

௭௭௫. ஆர்வம் - இரதி கன்மம். ஓசை யுலகு - புகழ் பொருந்திய தேவருலகம். உண்ண - அவ்வுலக போகத்தை நுகர. ஏசு பெண் - பொல்லாதென்று பேசும் பெண் பிறப்பு. ஞானமாய் - ஞானம் பெற்று.

௭௭௬. காமவல்லி - காமவல்லிக் கொடி. இது தேவருலகத்துக் கற்பக மரத்தில் பற்றிப் படர்வது என்பர். தாம வார் குழல் - மாலையணிந்த நீண்ட கூந்தல். ஏமம் - உயிர்க்கு ஏமமாகச் சிறந்த.

௭௭௭. பாவனை - பதினாறுவகைப் பாவனை; இவை தரிசன விசுத்தி முதலாக, பிரவசனவற்சலத்துவம் ஈருக உள்ளவை. இவற்றின் விரிவை ஸ்ரீபுராணத்துட் காண்க. பட்டினி - உண்ணு நோன்பு. தீர்த்தன் - இறைவனை. கொட்பின் - மனக்கொட்பினால். பூவுண் வண்டன நாவின் வேட்கை - பூவை யுண்கின்ற வண்டையொத்த நாவினுடைய வேட்கை. உணவு: அஃதாவது வண்டுபோலச் சிறிதாகக் கொள்ளும் உணவு. வேட்கை, ஆகுபெயர். நஞ்சின் . நஞ்சுபோல.

அருவிக் குன்றின்மேன் முடித்திட் டைவரும்
திருவின் றோற்றம்போற் றேவ ராயினர். ௭௭அ

## தேவரின்பம் நுகர்தல்

மண்கனிந்த பொன்முழவ மழையின் விம்ம
மாமணியாழ் திங்குழல்க ளிரங்கப் பாண்டில்
பண்கனியப் பாவைமார் பைம்பொற் றோடுங்
குண்டலமுந் தாம்பதைப்ப விருந்து பாட
விண்கனியக் கிண்கிணியுஞ் சிலம்பு மார்ப்ப
முரிபுருவ வேனெடுங்கண் விருந்து செய்யக்
கண்கனிய நாடகங்கண் டமரர் காமக்
கொழுந்தின்று தந்தவந்தாம் மகிழ்ந்தா ரன்றே. ௭௭௯

## நூலாசிரியர் அவையடக்கம் கூறல்

செந்தா மரைக்குச் செழுநாற்றங் கொடுத்த தேங்கொள்
அந்தா மரையா ளகலத்தவன் பாத மேத்திச்
சிந்தா மணியின் சரிதஞ் சிதர்ந்தேன் தெருண்டார்
நந்தா விளக்குச் சுடர்நன்மணி நாட்டப் பெற்றே. ௭௮௦

---

௭௭அ. கருவில் - கருவில் தங்கும்போதே. கட்டிய காலம் - இறத்தற்கு விதித்த காலம். வந்தெனை - வந்ததாக. உருவ.....,கோட்டின் - உயர்ச்சியால் தன்னிடத்தே பிறையையுடைய உச்சியால். முடித்திட்டு - ஏனைத் தவங்களையும் செய்து முடித்துவிட்டு, திருவின் தோற்றம் போல் - தீவினை நீங்கி நல்வினை வந்தால் திருமகள் நினைவின்றித் தோன்றுமாறு போல, இவரும் இவ்வுடம்பினை நீக்கித் தேவர் உடம்பு பெற்றனர்.

௭௭௯. மண் கனிந்த - மண்ணுறுதல் முற்றவும் அமைந்த. விம்ம - முழங்க. பாண்டில் - கஞ்சதாளம். பண்கனிய - பண் முற்றுப் பெறப் பாட. பதைப்ப - அசைய. விண் கனிய - விண்ணவர் மனம் உருக. விருந்து - தேவ மகளிர் காமக் கொழுந்தின்று செய்யும் இன்பம்.

௭௮௦. அந் தாமரை - இறைவன் திருவடி. தாமரைக்கு மணம் தந்த தாமரை யென்றார். ஆள் அகலத்தவன் - அத் தாமரையை யாளும் விரிந்த ஞானத்தையுடைய சிவகன். சிதர்ந்தேன் - பரக்கக் கூறினேன். தெருண்டார் - அறிஞரும் இதனை நன்றென்று தெளிந்தார். நன்மணி - விளி. நந்தா - அவியாத. சுடர் நன்மணி - உள்ளத்தே நின்றெரியும் நன்மணி. நன்மணி - குருக்கள்.

இது நூலாசிரியர் தம் குருக்கட்குக் கூறியது.

## குருக்கள் வணக்கம்

செய்வினை யென்னு முந்நீர்த்
  திரையிடை முளைத்துத் தேங்கொள்
மைவினை மறுவி லாத
  மதியெனுந் திங்கண் மாதோ
மொய்வினை யிருள்கண் போழு
  முக்குடை மூர்த்தி பாதம்
கைவினை செய்த சொற்பூக்
  கைதொழு தேத்தி னேனே. ௭௮௧

### சீவக சிந்தாமணி-சுருக்கம்
முடிந்தது.



௭௮௧. செய்வினை - முன்னே செய்த நல்வினை. மைவினை மறு - தீவினையாகிய களங்கம். மதி - அறிவு. மொய்வினை யிருள் - செறிந்த வினையாகிய இருள். கண் போழும் - கட்குப் புலனாகாவாறு அறக் கெடுக்கும். கைவினை செய்த - ஆராய்ந்த.

# பாட்டு முதற்குறிப்பகராதி

